திருத்தவொண்ணுதே விஷயாந்தரங்களிலே மண்டி விமுகராயப் போரும் சேதநர்க்கு வைமுக்க்யத்தை மாற்றி ருசியை விளைக்கக் கடவதாய்'', என்றருளிச்செய்தபடியே ஹிதாநுஶாஸநம் பண்ணுகிற ச்ருதி ஸ்ம்ருதி முதலான ஶாஸ்த்ரங்களானவை அருசி பிறக்கும்படி இதர விஷயங்களினுடைய பொல்லாங்குகளையும், ருசி பிறக்கும்படி பகவத் விஷயத்தினுடைய நலன்களையும் உபதேசித்தாலும்அவற்ருலே இதர விஷயங்களை விட்டு பகவத் விஷயத்திலே முகம் வைக்க இசையாதே வர்த்திக்கும் சேதநர்க்கு வைமுக்கியத்தை மாற்றித் தன்வடிவழகு முதலானவற்ருலே சித்தாபஹாரம் பண்ணி, தன்னைக் காணவேண்டோமென்றிருக்கு மிருப்பைக் குலைத்துத் தன் பக்கலிலே ருசியை ஜநிப்பிக்கையும், ருசி பிறந்த பின்பு தன்னை பஜிக்குமவர்களுக்குக் கண்ணுக்கும் நெஞ்சுக்கு மினிதாம்படி சுபாச்ரயமாயிருக்கையும், அவ்வளவேயன்றியே தன்னையே உபாயமாக ஸ்வீகரிக்குமளவில் குணதோஷ நிருபணம் பண்ணுதே ஸகல லோகங்களிலுள்ளவர்களுக்கும் ஶரண்யமாயிருக்கையும், வைலக்ஷண்யத்தில் வாசியறிந்தவர்களுக்கு "என்னமுதினைக் கண்ட கண்கள் மற்ரென்றினைக் காணவே" என்னும்படி அநுபாவ்யமாயிருக்கையுமாகிற இவையெல்லாம் அர்ச்சாவதாரத்திலே பரிபூர்ணமாயிருக்கும். .... ... (201)

**202. ஸ்வஸ்வாமி பாவத்தை மாருடிக்கொண்டு அஜ்ஞரைப் போலேயும் அசக்தரைப் போலேயும் அஸ்வதந்த்ரரைப்போலேயும் இருக்கச்செய்தேயும், அபார காருண்ய பரவசனுய்க்கொண்டு ஸர்வாபேக்ஷிதங்களையுங் கொடுத்தருளும்.**

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

ஈச்வரப்ரகரணம் முற்றிற்று.

தத்வத்ரயம் முற்றிற்று.

202. இன்னமும் இவ்வர்ச்சாவதாரத்தின் குணமிகுதியைக் கூறி இப்பிரபந்தம் தலைக்கட்டப்படுகிறது. ஸ்வஸ்வாமி பாவத்தை மாருடிக்கொள்வது அர்ச்சாவதாரத்திலே விசேஷம். அதாவது, சேதநன் உடைமையாயும் தான் உடையவனுயுமிருக்குமிருப்பு வ்யவஸ்திதமாயிருக்கச் செய்தேயும் இவன் தன்னுடைமைகளைக் கணக்கிடும்போது தன்னையும் கணக்கிடும்படி அவனை ஸ்வாமியாகவும் தன்னை ஸொத்தாகவும் தன்னிச்சையாலே மாருடிக் கொள்வது. அதற்கு மேலே அஜ்ஞரைப்போலேயும் அஶக்தரைப்போலேயும் அஸ்வதந்த்ரரைப்போலேயுமிருப்பது மற்ருெரு விசேஷம். அதாவது, ஸர்வஜ்ஞனுயிருக்கச் செய்தேயும் ஒன்றுமறியாதவன் போலவும், ஸர்வசக்தியுக்தனுயிருக்கச் செய்தேயும் தன்னைத் தான் ரக்ஷித்துக்கொள்ளமாட்டாத அசக்தரைப் போலேயும், நிரங்குச ஸ்வதந்த்ரனுயிருக்கச்செய்தேயும் தனக்கென்ன வொரு முதன்மையில்லாத அஸ்வதந்த்ரரைப் போலேயிருப்பது, ஆக இங்ஙனேயிரா நிற்கச் செய்தேயும் விமுகரையுமுட்படவிடமாட்டாதபடி கரைபுரண்டு செல்லுகிற காருண்யமிட்ட வழக்காய்க் கொண்டு கண்கொடுத்தல் மக்கள் கொடுத்தல் முதலாக மோக்ஷமளித்தலளவாக அதிகாராநுகுணம் சேதநர்க்கு ஸகலாபேக்ஷிதங்களையும் கொடுத்தருளும்.

ஆக, எம்பெருமானுடைய ஸ்வரூபவைலக்ஷண்ய மென்ன, அந்த ஸ்வரூபத்தையும் நிறம்பெறுத்தவல்ல குணவைலக்ஷண்ய மென்ன, அந்த குணங்களடியாக அவன் பண்ணும் ஸ்ருஷ்டி முதலான வியாபாரங்களென்ன, அப்படி காரணபூதனானவனுடைய ஸர்வ ஸமாச்ரயணீயத்வமென்ன, அவனுடைய ஸர்வ பலப்ரதத்வமென்ன, காரணத்வாதிகளுக்கு உபயுக்தமான விலக்ஷண விக்ரஹ யோகமென்ன, அந்த விக்ரஹ வைலக்ஷண்யத்திற்குத் தகுதியான லக்ஷ்மீபூமிநீளா நாயகத்வமென்ன, அந்த விக்ரஹ யோகமடியாக வந்த பரத்வாதி பஞ்சப்ரகாரமென்ன ஆகிய இவற்றைக் கூறி ஈச்வரதத்வம் தலைக்கட்டிற்றாயிற்று. .... (202)

பிள்ளை லோகாசார்யரருளிச்செய்த தத்வத்ரயத்தில்

ஈச்வரப்ரகரணம் முற்றிற்று.

பெருமாள்கோயில் ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் ஸ்வாமி தொகுத்த

மாமுனிவன் திவ்யஸூக்தி ஸாரார்த்தமாலிகையில்

தத்வத்ரய ஸாரார்த்ததீபிகை

முற்றுப்பெற்றது.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்.